*இரண்டு கண்களாகிய வண்டுகள் வந்து பொருந்துதலில்லாத மாலையையுடைய வீரனான வீடுமன், பகர்வான் - (அதற்கு உத்தரம்) கூறுவான்; (எ - று.) - அதனை மேற்கவியிற் காண்க.*

*யோசனை, காதம் என்பன ஒரு பொருளன. பகீரதி - பகீரதனாற் கொணரப்பட்ட தென்று பொருள்; பகீரதன் - சூரியகுலத்துப் பிரசித்தனான ஓரரசன்; இவன், கபில முனிவரது சாபத்தாற் சாம்பரானவரும் சகரசக்கரவர்த்திகுமாரரும் தனது பாட்டனுக்குச் சிற்றப்பன்மாருமாகிற அறுபதினாயிரவரைநற்கதி பெறுவித்தற் பொருட்டுத் தேவலோகத்திலிருந்து ஆகாச கங்காநதியைக்கீழுலகத்துக்குக் கொணர்ந்தானென வரலாறு காண்க. படையாவையும் என்றது,இருதிறத்துச் சேனைகளையும் என்றபடி. "பண்ணளி நெருக்கொழிய மாதரிருகண்ணளிபடாத தொடை மீளி" என்பதற்கு, பெண்களுக்குச் சிறிதும்வசப்படாமல் நித்திய பிரமசாரியாகவே நின்ற சூரனென்று கருத்து: மிக்கவைராக்கியமுடையவனை மங்கையர் காதலித்து நோக்குதலுஞ் செய்யார். தொடை என்றது - அடையாளப் பூமாலை, போர்ப் பூமாலை என்றஇரண்டையும். (392)*

### *32.-வீடுமன் கூறும் மறுமொழி.*

***ஒருபகலில்யான்மலைவன்முப்பகலிலேமலைவனுபநிடதவிற்கை முனியும்,***
***வருபகலொரைந்தின்மலைவன்பரிதிமைந்தன்முனி மைந்தனொருநாழிகையினிற்,***
***பொருபடையடங்கமலையும்புவியும்வானொடுபுரந்தர னிருந்தவுலகும்,***
***வெருவரமுனைந்தொருகணத்தினிடையேமலைவன் வில்விசயனென்றனனரோ.***

*(இ -ள்.) 'பொரு படை அடங்க - போர் செய்யவல்ல இச்சேனைகள் முழுவதையும், யான் - நான், ஒரு பகலில் - ஒரு தினத்திலே, மலைவன் - போர் செய்து கொல்லவல்லேன்; உபநிடதம் - வேதாந்தத்தை யறிந்த, வில் கை- வில்லையேந்திய கையையுடைய, முனியும் - துரோணாசாரியனும், முப் பகலிலே - மூன்று தினத்திலே, மலைவன் - போர்செய்து கொல்லவல்லான்; பரிதி மைந்தன் - சூரியபுத்திரனான கர்ணன், வரு பகல் ஒர் ஐந்தில் - அடுத்துவருகிற ஒரு அஞ்சுதினத்திலே, மலைவன்-; முனி மைந்தன் - துரோணபுத்திரனான அசுவத்தாமன், ஒரு நாழிகையினில் - ஒரு நாழிகைப்பொழுதிலே, மலையும் - போர்செய்து கொல்லவல்லான்; வில் விசயன் - (காண்டீவமென்னும்) வில்லையேந்திய அருச்சுனனோ எனின், புவியும் - பூலோகத்து உயிர்களும், வானொடு - ஆகாயத்திற் சஞ்சரிக்கும் பிராணிகளும், புரந்தரன் இருந்த உலகும் - இந்திரன் வீற்றிருக்கிற சுவர்க்கலோகத்தார்களும், வெருவர - அஞ்சும்படி, முனைந்து - எதிர்த்து, ஒருகணத்தின் இடையே - ஒருக்ஷணப்பொழுதினுள்ளே, மலைவன் -;' என்றனன் -என்று (வீடுமன் துரியோதனனுக்குக்) கூறினான்; (எ - று.) - அரோ - ஈற்றசை. இதில், அவரவர்க்குப் போர்த்திறத்து உள்ள தாரதமியம் [ஏற்றத்தாழ்வு] விளங்குவது காண்க; உபநிஷதம் - வேதத்தின் சாரமான பாகம்; வேதத்தின் முடிவென்றும், பிரமகாண்டமென்றுங் கூறப்படும்; இது - பகவானைப்பற்றிக் கூறுவது. புரந்தரன் - (பகைவரது) பட்டணங்களை (அல்லது) உடம்புகளை அழிப்பவன்; புரம் - ஊரும் உடலுமாம். (393)*

### *33.-எதிர்ப்பக்கத்துச்சேனையிலுள்ளவர் யாவரும் தனக்கு நெருங்கிய உறவினராயிருந்தது கண்டு அருச்சுனன் கலங்குதல்.*

***யானையொடுதேர்புரவியாளிவையநேகவிதமெண்ணரிய தானையுடனே,***
***சேனைமுதலாய்முனையினின்றருள்பிதாமகனுமற்றுளசெழுங் குரவருந்,***
***தானைநெடுவாரியிடைதேரிடையருக்கனென நின்றதுரியோ***

**தனனும்வான்,**
**மீனைநிகர்கேளிருமணிந்தநிலைகண்டுருகிவிபுதபதி மைந்தன்**
**மொழிவான்.**

*(இ -ள்.) யானையொடு - யானைகளும், தேர் - தேர்களும், புரவி - குதிரைகளும், ஆள் - காலாட்களும், இவை - என்னும் இவற்றாலாகிய, அநேகம் விதம் - பலவகைப்பட்ட, எண் அரிய - அளவிட வொண்ணாத, தானையுடனே - சேனைகளுடனே, சேனை முதல் ஆய் முனையில் நின்றருள் பிதாமகனும் - சேனைத் தலைவனாய்ச் சேனாமுகத்தில் நின்றருள்கிற (தன்பெரிய) பாட்டனான வீடுமனும், மற்றுமுள செழு குரவரும் - (துரோணாசாரியன் கிருபாசாரியன் அசுவத்தாமன் முதலாக) மற்றுமுள்ள சிறந்தபெரியோர்களும், தானை நெடுவாரியிடை தேரிடை அருக்கன் என நின்றதுரியோதனனும் - சேனையாகிய பெரிய கடலிலே தேர்மீது சூரியன்போலநின்ற துரியோதனனும், வான் மீனை நிகர் கேளிரும் - நட்சத்திரங்களையொத்த [அநேகரான] (சல்லியன் துச்சாதனன் விகர்ணன் சயத்திரதன் சகுனி முதலான) உறவினர்களும், அணிந்த - வரிசை வரிசையாக நின்ற, நிலை - நிலையை, கண்டு - (எதிரிற்) பார்த்து, விபுதபதி மைந்தன் - தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனது புத்திரனான அருச்சுனன், உருகி- (இவர்களோடு எங்ஙனம் போர் செய்வதென்று) மனங்கரைந்து, மொழிவான்- (கண்ணனை நோக்கிக்) கூறுவான்; (எ - று.)*

*எதிர்வந்து நின்ற வீரர்யாவரும் பாட்டனும் அண்ணன் தம்பி மாரும் மாமனும் மற்ற உறவினரும் கல்விபயிற்றிய ஆசாரியரும் நண்பர்களுமாக விருக்கக் கண்டு அருச்சுனன் மனம் மாறிக் கூறுகிறான். குரவர் - குரு என்பதன் பன்மையான, குரவ: என்னுஞ்சொல் ஈறு திரிந்தது, வாரி - நீர்; கடலுக்கு இலக்கணை. அளவிறந்த பரப்பும் ஆரவாரமும் அணியணியாக வருதலும் அச்சந்தருதலும் பற்றிக் கடலைச் சேனைக்கும், கடலினிடையில் தேரின் மீதுசிறந்துவிளங்குதல் பற்றிச் சூரியனைத் துரியோதனனுக்கும், அளவிறந்து நெருங்கிவிளங்குதல் பற்றி நட்சத்திரங்களைச் சுற்றத்தார்க்கும் உவமை கூறினார். (394)*

### *34.-உற்றாரைக் கொல்லப்பின்வாங்கி அருச்சுனன் போர் செய்யமாட்டே னெனல்.*

**நின்றமர்தொடங்கநினைகிற்பவர்பிதாமகனுநீள்கிளைஞருந்துணை**
**வருங்,**
**கொன்றிவரைவாகுவலியிற்கவர்வதித்தரணிகொள்பவனு**
**மென்றுணைவனே,**
**யென்றுபலபேசியதிபாதகமெனக்கருதியான்மலைவுறே**
**னினியெனா,**
**அன்றுவசுதேவன்மகனோடுரைசெய்தானமரிலவனுமிவ**
**னோடுரைசெய்வான்.**

*(இ -ள்.) 'நின்று - (எதிரில்) நின்று, அமர் தொடங்க - போரைத் தொடங்கிச்செய்ய, நினைகிற்பவர் - எண்ணியிருப்பவர், பிதாமகனும் - பாட்டனும், நீள் கிளைஞரும் - மிக்க உறவினரும், துணைவரும் - அண்ணன் தம்பிமார்களும், (ஆவர்); இவரை - இவர்களை, வாகு வலியின் - தோள்வலிமையால், கொன்று -, கவர்வது - பறித்துக்கொண்டு அடையப்படுவது, இ தரணி - இந்தப் பூமியாம்; கொள்பவனும் - (அதனை) அடைபவனும் எண் துணைவனே - எனது தமையனே,' என்று -, பலபேசி - அநேக வார்த்தைகளைச் சொல்லி, அதி பாதகம் என கருதி - (இவர்களைக்கொல்வது) மிகப்பாவமென்று எண்ணி, இனி யான் மலைவு உறேன்எனா - இப்பொழுது நான் போர்செய்ய மேற்கொள்ளேனென்று, அன்று -அப்பொழுது, அமரில் - யுத்தகளத்தில், வசுதேவன் மகனோடு - வசுதேவபுத்திரனான கண்ணனுடனே, உரை செய்தான் - (அருச்சுனன்) கூறினான்;அவனும் - அந்தக்கண்ணபிரானும், இவனோடு - இவ்வருச்சுனனோடு, உரைசெய்வான் - (அதற்கு உத்தரங்) கூறியருளுவான்; (எ - று.)-அதனை, மேல்வீட்டுமபருவ முதற்போர்ச்சருக்கத்தில்*

*இரண்டாங்கவிமுதல் ஆறுகவிகளிற்காண்க. 'உரைசெய்தான் விசயன்' என்றும் பாடம்.*
*(395)*

**அணிவகுப்புச்சருக்கம் முற்றிற்று.**

**உத்தியோகபருவம்முற்றுப்பெற்றது.**

*---- **** ----*